Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 335

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா ரூ. **10** ஜீவியச் சந்தா ரூ. **100**

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1976 மே, சித்திரை மீ

# ஸ்ரீ ராமாநுஜன்—335

ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 28 | நளஆ சித்திரை மாதம் 10—5—76 | ஸஞ்சிகை 11


## வையங்கண்ட வைகாசித் திருநாள்

காஞ்சீபுரம் தேவப்பெருமாளுக்கு நடைபெறும் வைசாக ப்ரஹ்மோத்ஸவத்திற்கு 'வையங்கண்ட வைகாசித்திருநாள்' என்று அநாதியானவழக்கு. நூற்றெட்டுத் திருப்பதிகளுள் எண்பத்திரண்டு திவ்யதேசங்களே ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் அநுபவிக்கக் கூடியவையாகவுள்ளன. மலைநாட்டிலும் வடநாட்டிலுமுள்ள இருபத்தாறு ஸ்தலங்கள் போக எண்பத்திரண்டு திவ்ய தேசங்களில் ஸம்வத்ஸரோத்ஸவமாகிய ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறும் திவ்யதேசங்கள் முப்பது அல்லது முப்பத்தைந்து தேறக்கூடும். இவற்றுள் கோயில் திருமலை- பெருமாள்கோயிலென்கிற மூன்றுதிவ்யதேசங்களில் நடைபெறும் ப்ரஹ்மோத்ஸவங்கள் மிக்கபுகழ்பெற்றவை ஸ்ரீரங்கத்தில், தை மாசி பங்குனி சித்திரை ஆகிய நான்கு மாதங்களிலும் நான்கு ப்ரஹ்மோத்ஸவங்கள் நடைபெற்று வருவன. அவ்விடத்தில் ப்ரஹ்மோத்ஸவம் ஸேவிப்பதற்கென்று வந்து கூடுகிற ஸ்ரீவைஷ்ணவர்கள் பரிமிதர்களாகவேயிருப்பர்கள். அவ்வுத்ஸவங்களில் திவ்யப்ரபந்த கோஷ்டியிலும் வேதபாராயண கோஷ்டியிலும் ஸாமான்ய தினங்களிற்போலவே ஸ்வாமிகள் ஸேவைஸாதிப்பர்கள், திருமலையில் புரட்டாசி ப்ரஹ்மோத்ஸவம் பெரும்பாலும் ஒன்றுதான். நவராத்ரி மஹோத்ஸவத்தோடு கூடியேவரும். சிற்சில ஸம்வத்ஸரங்களில் நவராத்ரி மஹோத்ஸவம் தனிப்படுவதுண்டு; அப்போது இரண்டு ப்ரஹ்மோத்ஸவமாகும். தேவஸ்தானத்திலிருந்து உபயவேத கோஷ்டியார்களுக்கும் விசேஷமாக ஸன்மானமளிக்கப்படுவதால் உபயகோஷ்டிகளும் புஷ்டியாகவே காட்சிதரும். ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாளுக்கு எப்போதும் ஒருப்ரஹ்மோத்ஸவந்தான் நடைபெறுவது. சித்திரை நக்ஷத்ரத்தில் த்வஜாரோஹணமாகி வைகாசித் திருவோணத்தில் அவப்ருதமாகும். தேவப்பெருமாளுக்கு நடைபெறும் பஞ்சபர்வோத்ஸவங்களே மற்ற திவ்யதேசங்

களுக்கு ப்ரஹ்மோத்ஸவமாயிருக்குமென்று பல பெரியார்கள் ஸாதிக்கக் கேட்டிருக்கிறோம். வையங்கண்ட வைகாசித்திருநாளென்கிற வ்யபதேசம் இன்று நேற்று ஏற்பட்டதன்று. இந்த மஹோத்ஸவத்தை ஸேவிக்கவரும் ஜனத்திரளை வையமெல்லாம் கண்டிருப்பதால் அதைப்பற்றி நாமெழுதத் தேவையில்லை.

இந்த காஞ்சீக்ஷேத்திரமானது சின்னகாஞ்சீபுரம் பெரியகாஞ்சீபுரமென்று இருவகுப்பாகவுள்ளது. இவ்வுத்ஸவத்தில் தினந்தோறும் இரண்டுவேளைகளிலும் வாஹனப்புறப்பாடுகள் பெரியகாஞ்சீபுரம் வரையில் நடைபெற்றுவருவது உலகமறிந்தது. பெரியகாஞ்சீபுரத்திற் கெழுந்தருளாமல் சின்னகாஞ்சீபுரத்தளவிலே இவ்வுத்ஸவம் நடைபெற்றுநிற்குமாகில், பலபல நாடுகளிலிருந்து ஸேவிக்கவரும் ஜனத்திரள் பெரும்பாலும் இவ்வுத்ஸவ ஸேவையை இழந்தே போகவேண்டிவரும். சின்னகாஞ்சியிலும் பெரியகாஞ்சியிலும் எத்தனை வீதிகளுண்டோ, அத்தனை வீதிகளிலுமன்றோ வெளியூர் ஸேவார்த்தி ஜனங்கள் தங்கிப்போகின்றனர். அத்தனை ஜனங்களுக்கும் ஆஹாரத்திற்கு அருமையில்லாதபடி பற்பல விடங்களில் பற்பல ஜாதியர்க்கும் போஜனஸௌகரியங்களை ஆங்காங்குள்ள பெருந்தகையாளர்கள் ஏற்படுத்திவருகிறார்கள். ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகளுக்கு ஒருசிரமமும் இல்லாதபடிக்கு சின்னகாஞ்சீபுரத்திற்குள் ஐந்தாறு இடங்களில் ததீயாராதனைகள் நடத்தப்பட்டு வருகின்றன. திருவல்லிக்கேணியில் வாழும் ஸ்ரீமான் உவே. K. V. ஸ்ரீநிவாஸன் முதலானவர்கள் பற்பல பெரியார்களின் உதவியைக் கொண்டு கீழண்டை மாடவீதியில் V. V. V. பாடசாலையில் பத்துநாளும் இரண்டு வேளைகளிலும் நடத்திவருகிறார். சென்னை க்ரோம்பேட்டை ஸ்ரீமான் உ. வே. T. ஸுந்தரப்ஸ்வாமி ஸ்ரீரங்கராஜ வீதியில் லைப்ரெரி ஆஸ்தானத்தில் நினப்படி பூரிதக்ஷிணையோடுங்கூட நடத்திவருகிறார். ஸன்னிதிவீதியிலேயே சிலக்ருஹங்களில் வழக்கமாக நடந்து வருகின்றது. ஆகவே இவ்வுத்ஸவத்தில் எந்த ஜாதியர்க்கும் போஜனத்திற்கு ஒருவிதமான சிரமமும் கிடையாது.

ரைல்பாதை ஏற்படாத முற்காலத்திலும் பலபல ஸம்ஸ்தானங்களிலிருந்து ராஜாக்களும் ஜமீன்தார்களும் இவ்வுத்ஸவ ஸேவிப்பதற்கென்றே வந்து திரள்வர்களாம். மைஸூர் ராஜா, கத்வால் ராஜா, வனபர்த்திராஜா, ஜடப்ரோல்ராஜா, நூஜிவீடு ராஜா, மைலவரம் ராஜா, பொப்பிலி ராஜா, பிடாபுரம் ராஜா........ என்றிப்படி பலராஜாக்கள் தவறுதுவந்து கொண்டிருப்பர்களாம். அவர்கள் தங்கும் வீதிக்கு ராஜவீதியென்றே பெயர் இற்றைக்கும் வழங்கி வருகின்றது. அந்தவீதிகளில்தான் இப்போதும் உத்ஸவவைபவம் காணலாகிறது. ஆகவே வையங்கண்ட வைகாசியுத்ஸவமென்ற வ்யபதேசம் இத்திருநாளுக்கு மிகமிக ஏற்கும்.

நாளது 11–5–76 முதல் 20-5-76 வரைக்கும் இந்தத் திருநாள் நடைபெறும்.

## வேத விசாரப் பகுதி

தைத்திரீய ஸம்ஹிதையில் ஸப்தகாண்டங்களிலும் ஓதப்பட்டுவருகிற பதங்களுக்கு ஸ்வரம் நியதமென்றும், அது மாறுபடுமிடங்களில் நிமித்த விசேஷம் இருந்தேதீரவேண்டுமென்றும் நாம் பலகால்தெரிவித்து ஸ்வரம்பேதிக்குமிடங்கள் பலவற்றையும்

அப்படி பேதிப்பதற்கான நிமித்தவிசேஷங்களையும் ஸ்வரபேதஸித்தாஞ்ஜநம் முதலிய நமது நூல்களிலும் ஸ்ரீராமாநுஜனிலும் வைதிகமநோஹராவிலும் நிரூபித்திருக்கிறோம். சிற்சிலபதங்களுக்கு ஸ்வரம் பேதித்திருப்பதை (விமர்சிக்கும்போது) காண நேர்ந்தது. அதற்கு நிமித்தவிசேஷம் நமக்குப் புலப்படவில்லை. விசேஷஜ்ஞர்களான பெரியார்கள் தெரிவிக்கக் கூடுமென்று இரண்டு பதங்களைமட்டும் இங்கு ப்ரஸ்தாவிக்கிறேன்.

மம என்கிறபதம் ஆயிரந்தடவை ஓதப்படுகிறது. எங்கும் முதலெழுத்து உதாத்தமாயும், இரண்டாமெழுத்து ஸ்வரிதமாயுமே உள்ளது. ஏழாவது காண்டத்தில் நாலாவது ப்ரச்நத்தில் *மேஷஸ் த்வா பசதைரவது* என்னு மநுவாகத்தில் மட்டும் (முடிவில்) *வஸோமமவில் (மம) என்பது நிஹசமாக [ஸர்வாநுதாத்தமாக] உலகம்முழுவதும் ஓதப்பட்டுவருகிறது, நிமித்தவிசேஷம் அறிய விருப்பம்.

இதேபோல், (யயா) என்கிறபதமும் ஆத்யுதாத்தமாயும் அந்தஸ்வரிதமாயும் எங்கும் ஓதப்பட்டுவருவதாம். இது சிற்சிலவிடங்களில் ஸர்வாநுதாத்தமாக ஓதப்பட்டுவருகின்றது. (3-1 முடிவில்—*ஆ ஸவம் ஸவிதுர் யயா* போன்ற இடங்கள் வேதமோதினவர்களுக்குத் தெரியுமாதலால் அத்தனையும் எடுத்துக்காட்ட வேண்டியதில்லை. இதற்கும் நிமித்தவிசேஷம் தெரிந்து கொள்ளவிருப்பம். ... *

# கம்பர் பெருமான் பணித்த பாசுரமொன்று

"அந்தமிலாமறை யாயிரத்தாழ்ந்த அரும்பொருளைச்
செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும்
தந்தம்விழாவு மழகுமென்னுப ? தமிழார்கவியின்
பந்தம்விழாவொழுகுங் குருகூர்வந்த பண்ணவனே ! —(சடகோபரந்தாதி.)

திவ்யஸூரிகளிடத்தும் திவ்யப்ரபந்தங்களிடத்தும் திவ்யதேசங்களிடத்தும் அன்புமார்வமும் நிரப்பிய ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணர்களில் ஒருவர்கூட இங்ஙனே பேசியிருக்கக் காணோம். திருவாய்மொழியானது வேதப்பொருளே நிரம்பியதென்றும், பிராமணர்களாகப் பிறந்தவர்களுக்குத் திருவாய்மொழியே தஞ்சமென்றும், தேவாலயங்களில் நடைபெறும் உத்ஸவங்களுக்கு இதனாலேயே அழகுமிக்கதாமென்றும் திடமாக வறிந்து பேசியுள்ளார். *அநந்தா வை வேதா:* என்று வேதமே ஓதினபடி அவதிகாண முடியாதபடியுள்ள வேதங்களின் ஆழ்பொருள்களைக்கொண்டது திருவாய் மொழியென்று வைதிகர்கள் விரித்துரைக்கக் கேட்டிருந்ததனாலன்றோ கம்பர் இங்ஙனே பணித்தபடி. ஆழ்வார் திருவாய்மொழியருளிச் செய்யாவிடில் அந்தணர்களின் கதி என்னாகும்? ஆலயங்களில் நடைபெறும் திருவிழாக்களின் கதிதான் என்னாகும்? என்று துணிந்து கூறுகின்ற கம்பர் திவ்யதேசங்களில் திவ்யப்ரபந்த ஸேவைகளினால் உண்டான அதிசயத்தை ஸாக்ஷாத்தாக அநுபவித்து மகிழ்ந்தவரென்பது எளிதினுணரலாகும். நம்மாழ்வாருடைய திவ்யப்ரபந்தத்தை நோக்கிச் சொன்னது அவருடைய திவ்யப்ரபந்தத்திற்கு அங்கோபாங்கங்களாக அமைந்த மற்றுமுள்ள திவ்யப்பிரபந்தங்களை நோக்கியுஞ் சொன்னபடியாம்.

"வேத சதுஷ்டயாங்கோபாங்கங்கள் பதினலும் போலே இந்நாலுக்கும் இருந்தமிழ்நூற்புலவர் பனுவலாறும் மற்றையெண்மர் நன்மாலைகளும்" என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணை இங்கு நோக்கத்தக்கது. ... ... *

ஸ்ரீமதுபயவே. நியாய வேதாந்தவித்வாந்.
கோ. கம். அப்பன். ப்ரணதார்த்திஹராசார்ய ஸ்வாமி. *(வைகுண்டவாஸீ)*



இந்த மஹாஸ்வாமி திருநாடலங்கரித்து முப்பது வருஷங்களுக்குமேல் ஆய்விட்டது. காஞ்சீபுரம் ஸன்னிதி வீதியில் ஸொந்தத் திருமாளிகையில் பெரும்பாலும் எழுந்தருளியிருந்தவர். திருக்கண்ணபுரம், திருவிந்தளூர் முதலான திவ்யதேசங்களிலும் சிஷ்யர்களின்வேண்டுகோளுக் கிணங்கி எழுந்தருளியிருந்ததுண்டு. நியாய வேதாந்தங்களில் பரிபூர்ண ப்ரஜ்ஞையுள்ளவராதலால் ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயங்களிரண்டையும் ஸமமாக நிர்வஹித்துப்போந்தவர். அஸ்மதாசார்யரான ஸ்ரீ ஜகத்குரு காதி ஸ்வாமி திருமாளிகைக்கு எதிர்த் திருமாளிகையில் எழுந்தருளியிருந்தவராதலால் இருவரும் அடிக்கடி ஸந்தித்து சாஸ்த்ரார்த்த சர்ச்சைகள் நடத்தியருளப் பலகால் ஸேவித்திருக்கிறேன் ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதியில் (திருவெஃகாவில்) இரண்டு மூன்று ஸம்வத்ஸரகாலம் தொடர்ந்தாப்போல் ஞாயிற்றுக்கிழமைதோறும் பகலில் இம்மஹான்களிருவரும் ஸபை கூட்டி வேதாந்தார்த்த ப்ரவசனங்கள் செய்துவந்தார்கள். அது வொரு நல்லடிக் காலம். அக்காலத்திலிருந்த வித்வான்களில் இப்போது ஒருவர்கூட இல்லை. ... *

## ஸ்ரீமான் உ. வே. N. P. ஸ்ரீரங்காசாரியார்



N. P. என்பதற்கு நெல்லிதுப்பம் பிரதிவாதி பயங்கரம்—என்று விவரணம். இவர் வடமொழி தென்மொழி ஆங்கிலங்களில் தேர்ச்சிபெற்று தினமணி பத்திரிகைக்கு உதவி யாசிரியராக இருந்துவருகிறார். இவருடைய பிதாமஹர் — ஸ்ரீ ரங்காசாரியரென்கிற திருநாமமுடையவர். சிறந்த பகவத்விஷயாதிகாரியாக விளங்கினவர். பலகால் காஞ்சீபுரிக்கெழுந்தருளி ஸேவை ஸாதித்தருள்வர். அவருடைய திருக்குமாரரையும் தன்கறிவேன். ஆக த்ரிபூருஷம் நானறிந்த பரமபவித்ர குடும்பம். மஹா விவேகியும் மேதாவியுமான இந்த ஸ்ரீரங்காசாரியார் நீடூழி வாழ்க. ... ... *



கனம்பொருந்திய N. கிருஷ்ணஸாமி ரெட்டியாரவர்கள், ஓய்வுபெற்ற சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ்.



மேன்மைதங்கிய ப்ரஹ்மஸ்ரீ. K. S. வேங்கடராமன் அவர்கள் ஓய்வு பெற்ற சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ்.

நீதிமன்றங்களில் உயர் நீதிபதிஸ்தானத்தை வஹிக்கவல்ல மஹாப்ரபுக்கள் மஹா பாக்யசாலிகள். இவர்களை அரசர்களென்னலாம். "நாவிஷ்ணு: ப்ருதிவீபதி:" என்றும், "அஷ்டாபிர் லோகபாலாநாம் மாத்ராபிர் நிர்மிதோ ந்ருப:" என்றும் சொல்லியிருப்பது இப்படிப்பட்ட உத்தமாதிகாரிகளைப் பற்றியேயாம். பூதத்தாழ்வார் தம்முடைய திருவந்தாதியில் மஹாப்ரபுக்களைப்பற்றி ஒரு பாசுரமருளிச்செய்கிறார்—

"கோவாகி மாநிலங்காத்து, நங்கண்முகப்பே
மாவேகிச் செல்கின்ற மன்னவரும்—பூமேவுஞ்
செங்கமலநாபியான் சேவடிக்கே மேழ்பிறப்பும்
தண்கமலமேய்ந்தார் தமர்." (69)

பத்மநாபனை எம்பெருமானது திருவடிகளைப் பலகாலம் (முற்பிறவிகளில்) ஆராதிக்கப்பெற்றவர்களே அரசர்களாகின்றார்கள் என்பது இப்பாசுரத்தின் கருத்து. அக்காலத்தில் (motor car) மோட்டர்கார் இல்லாமையாலே மஹாப்ரபுக்கள் குதிரையின் மீதேறிப் பயணம் செய்து கொண்டிருந்தபடியால் "கோவாகி,... மாவேகிச் செல்கின்ற மன்னவரும் என்றார் ஆழ்வார். பகவத்பக்தியதிசயத்தினால்தான் உயர் பதவி கிடைக்கின்றதென்பதுவே பாசுரத்தின் பரமதாற்பரியம். இதையறிந்தே ஜட்ஜ்கள் நன்றியறிவு கொண்டவர்களாய்ச் சிறந்த பக்திமான்களாயும் தருமருசியுள்ளவர்களாயும் விளங்கிவருகிறார்கள். மேலே விளங்கும் மஹநீயர்களிருவருடையவும் பரத்வமிருக்க ஸௌலப்ய ஸௌசீல்யங்களை அதிகமாக அநுபவிக்கும் பாக்கியம் நமக்கேயுள்ளது. இருவரும் நீடூழிவாழ்க. பல ஸதஸ்ஸுக்களில் இம்மஹாபுருஷர்களோடு கூடியிருந்து குளிரும் பாக்கியமுடையோம். ... *

# பிங்களவத்ஸர மங்கள மாலிகை (2)



(இது ஸஞ்சிகைதோறும் விசித்திரமாக வெளிவந்துகொண்டிருக்கும். முந்தின ஸஞ்சிகையில் [ஸ்ரீமதே ராமாநுஜாய நம:] என்கிற புராதன வாக்யத்திலுள்ள பத்தெழுத்துக்கும் சுலோகங்களாலும், பாசுரங்களாலும் எழுத்தடைவே விவரணம் கண்டீர். இப்போது அந்தப் பத்தெழுத்துக்களுக்கும் புதிய பத்து சுலோகங்களினால் விவரணம் காணீர். புதிய பத்துசுலோகங்கள் எப்படிப்பட்டவையென்னில் ஒவ்வொரு பாதத்திலும் பத்தெழுத்துக்கள் கொண்டவை. இத்தகைய சுலோகங்களை இயற்றி யநுபவிக்கவேணுமென்று ஒரு பெரியார் கனவிலே கட்டளையிட்டதனால் இந்த ஊஸகம் ப்ராதுர்ப்பவிக்கின்றது. ... *

ஸ்ரீபாஷ்யாதீந் நவநிதிகல்பாந் திவ்யக்ரந்தாந் நவ விரசய்ய ।
அஸ்மாஸு ப்ராக் பரமக்ருபாம் ய: ஸ்பஷ்டீசக்ரே ஜயது யதீந்த்ர: ॥

நவநிதிகளோ! நவரத்னங்களோ! என்னலாம்படியான ஸ்ரீ பாஷ்யம் முதலிய ஒன்பது திவ்ய க்ரந்தங்களை யருளிச்செய்து நம்மீது பரம க்ருபையை வெளியிட்டருளின எம்பெருமானார் வாழி வாழி.

மந்தாநாமப்யநவதிமோதம் தாதும் ஶக்தாந் பணிதிவிஶேஷாந் ।
ப்ரோசே மோசாபலரஸகல்பாந் ஸ்ரீமாந் ராமாவாஜமுநீந்த்ர: ॥

நம்போன்ற மந்தர்களுக்கும் எல்லையற்ற மகிழ்ச்சியைத் தரக்கூடியவையாய் ரஸ்தாளி வாழைக்கனியின் சுவைபோன்று இனிய ஸ்ரீஸூக்திகளை எம்பெருமானார் அளித்தருளினர். (அவர் இந்நிலவுலகில் நீடூழி வாழ்ந்தருள்க.)

தேஜ:புஞ்ஜஸ் ஸகலவிதோபி க்ஷோண்யாமஸ்யாம் யதிபதிரூபம் ।
த்ருத்வா ப்ராதுர்ப்பவநமயாஸீத் இத்யுக்தஞ்சேத் ந கலு ம்ருஷோக்தி: ॥

அக்நி ஸூர்யன் சந்திரன் வித்யுத் முதலான தேஜோராசிகளெல்லாம் நிலவுலகில் எம்பெருமானாராக வடிவெடுத்து ப்ராதுர்ப்பாவமடைந்ததென்றால் மிகையாகாது.

ராம: க்ருஷ்ணோ நரஹரிரூப: மத்ஸ்ய: கூர்ம: கிடிரிதி சாபூத் ।
யோயம் விஷ்ணுர் யதிபதிரூபம் த்ருத்வா ஸதயம் ஜகதி ஸமாகாத் ॥

எந்த ஸ்ரீமஹாவிஷ்ணு ராமக்ருஷ்ண நரஸிம்ஹ மத்ஸ்ய கூர்மவராஹாதி ரூபேண அவதரித்தாரோ, அவரே எம்பெருமானாராகவும் வடிவெடுத்து இந்நிலத்தில் போந்தருளினார்.

**மா**தா வந்த்யா ம இதி வதத்பிர் மூர்க்கைஸ் துல்யா ய இஹ பபூவு: I
தேஷாம் ஜல்பாங் நிரஸிதுமாகாத் ஶேஷ: ஸ்ரீமாங் யதிபதிமூர்த்யா II

*'மம மாதா வந்த்யா' (என் தாய் மலடி) என்னும் மூர்க்கர்களைப் போன்றவர்களின் ப்ரலாபங்களைக் கண்டிக்க ஆதிஶேஷன் எம்பெருமானாராக அவதரித்தார்.*

**நு**த்வா நத்வா யதிபதிபாதௌ போ! போ! மர்த்யாஸ் ஸபதி லபத்வம் I
ஶ்ரேயோ பூயோ புவந இதீஹ க்ஷேமா யோக்திம் வததி ந கோபி II

*'ஓ ஓ உலகர்களே! எம்பெருமானார் திருவடிகளைத் துதித்தும் தொழுதும் இந்நிலத்தில் நல்லநன்மைகளைப்பெறுங்க'ளென்று உபதேசிப்பாரில்லையே!*

**ஜா**யாதோஷைர் விக்ருதமநாஸ் ஸங் யஸ் ஸ்வீசக்ரே யதிபதிபாவம் I
ஸோயம் யோகீ பணிபதிரூபீ கோபீநாதாதபி மம ஹ்ருத்ய: II

*திருக்கச்சிநம்பி பக்கல் தாழ்வு நினைத்தது, பெரியநம்பி தேவியாரோடு பிணங்கியது முதலியதேவியார் குற்றங்களைக் கண்டுதிருவுள்ளம் நொந்து ஆஶ்ரம ஸ்வீகாரம் செய்துகொண்ட ஶேஷரூபியான எம்பெருமானார் எமக்கு ஆராத்யனான கண்ணபிரானிற்காட்டிலும் பரமபோக்யர்.*

**ய**ஸ்ய ஸ்ரீஸூக்த்யதிஶயபோதாத் ப்ராபத் பாதௌ விமதஜநோபி I
ஸோயம் ராமாநுஜமுநிரேச: தத்வஜ்ஞாநீத்யபஜத கீர்த்திம் II

*யாதவப்ரகாஶர், யஜ்ஞமூர்த்தி முதலான பிறரும் யாவரொருவருடைய ஸ்ரீஸூக்தி நலங்களைக்கண்டு திருவடி பணிந்தார்களோ, அந்த எம்பெருமானாரொருவரே ('தத்வித்தி ப்ரணிபாதேந' என்ற கீதாச்லோகத்திற் சொன்ன) தத்வதர்சியாவர்.*

**ந**க்ஷத்ரேஶப்ரதிமமுகம் தே ஸ்ரீமத்ராமாவரஜமுநீந்த்ர! I
பாக்யாதிக்யாத் ய இஹ மஹாந்த: ஸேவந்தே ஸ்மைதாங் ஹ்ருதி கலயே II

*எம்பெருமானாரே! சந்த்ரமண்டலப்போன்ற தேவரீருடைய திருமுகமண்டலத்தை நேரில் (விபவத்தில்) ஸேவிக்கப்பெற்ற பாக்யஶாலிகளான ஆழ்வானுண்டான் முதலானாரையே நெஞ்சில் நினைப்பேன்.*

**ம**ஸ்தம் தத்தாம் யதிபதிபாதௌ ஹஸ்தோ லிகதாத் தத்க்ருதி ப்ருந்தம் I
வக்த்ரம் ப்ரூயாத் யதிபதிஸூக்தீ: நித்யஞ்சைவம் விரமது கால: II

*எமது சென்னி எம்பெருமானார் திருவடிகளையே தரித்திடுக; கை அவருடைய திவ்யக்ரந்தங்களையே எழுதுக; வாய் அவருடைய ஸ்ரீஸூக்திகளையே சொல்லுக. நிச்சலும் எமது போது இப்படியே கழியட்டும்.*

*எம்பெருமானார் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீரஸ்து.

# பிங்கள வத்ஸர மங்கள மாலிகை (3)

"பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த
பாமன்னு மாறனடி பணிந்துய்ந்தவன்—பல்கலையோர்
தாம் மன்னவந்த விராமானுசன் சரணாரவிந்தம்
நாம் மன்னிவாழ நெஞ்சே! சொல்லுவோ மவன் நாமங்களே.
(இராமானுச நூற்றந்தாதி–முதற்பாசுரம்.)

இப்பாசுரத்தில் மொத்தம் இருபத்தெட்டு சொற்கள் அமைந்துள்ளன. பூ, மன்னு, மாது, பொருந்திய, மார்பன்...என்றிப்படி பிரித்துக்கணக்கிட்டால் இருபத்தெட்டு பதங்கள் தேறும். இப்பதங்களின் முதலெழுத்தையோ, சிலவெழுத்துக்களையோ, பரி பூர்ணபதத்தையோ கொண்டு சிலவிசேஷங்கள் விளம்புவோம்.

**1 பூ**—இஃது ஓரெழுத்தாயும் ஒருபதமாயுமுள்ளது. புஷ்பமென்று பொருள். வடசொல்திரிபாகக் கொண்டால் பூமியென்றுபொருள். திருச்சந்த விருத்தத்தொடக்கத்தில் (*பூநிலாய வைந்துமாய்) பூமியென்று பொருள். புஷ்ப மென்கிற பொருளில் சிறியதோர் உபந்யாஸம் கேளீர். ஆழ்வார்களின் அநுபவத்தில் மூன்றுவகைப் புஷ்பங்கள் காணப்படுகின்றன திருவிருத்தத்தில் *வண்டு களோ! வம்மின், நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ உண்டுகளித்துழல்வீர்க்கு* என்ற பாசுரத்தில் சொல்லப்படுகிற மூவகை தவிர, மற்றொரு மூவகை கேண்மின்; 1. எம்பெருமான் திருமேனியில் சாத்திக்கொண்டிருப்பவை; 2. நிலத்திலும் தடாகத்திலும் பூத்திருப்பவை; 3. எம்பெருமானுக்குச் சாத்துவதற்காக பக்தர்களின் கையிலுள்ளவை. ஆக இம்மூவகைகளுக்கும் பாசுரங்கள் வருமாறு; (1)*பூந்தண்மாலைத் தண்டுழாயும், *தூய்மையோகமாயினாய் துழாயலங்கல் மாலையாய்' *தோளிணை மேலும் நன்மார்பின்மேலும்*......இவை போன்றபாசுரங்கள் முதல்வகைக்குச் சேரும். (2)*பூவையுங்காயாவும் நீலமும் பூக்கின்ற காவிமலரென்றும் காண்தோறும்* *கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலும் முன்கண்டக்கால்* *தாமுளரே-தாமரையின் பூவுளதே* இவை போன்ற பாசுரங்கள் இரண்டாம் வகைக்குச் சேரும். (3) *இண்டைகொண்டு தொண்டரேத்த *இண்டையாயின கொண்டு தொண்டர்களேத்துவார்* *வானவர்வானவர் கோனொடும் சிந்துபூமகிழும்* *வரைச்சந்தனக்குழம்பும்—விரைப்பொலிந்த வெண் மல்லிகையும்* இவை போன்றபாசுரங்கள் மூன்றாம் வகைக்குச் சேரும்.

**2. மன்னு.** *மன்னுபெரும் புகழ்மாதவன்* என்கிற நாச்சியார் திருமொழிப் பதிகம் குயிற்பத்து எனப்படும். குயிலைப்பார்த்து எம்பெருமானைக் கூவும்படி வேண்டுகிறது இதில். குயிலைப்பற்றிய விசேஷார்த்தங்கள் கேண்மின். (ஸ்வாபதேசார்த்தம்) (1)*போற்றியானிரந்தேன் புன்னைமேலுறை பூங்குயில்காள்!* என்று நம்மாழ்வாரும், *புன்னை குருக்கத்தி நாழல் செருந்திப் பொதும்பினில் வாழுங்குயிலே!* என்று ஆண்டாளும் மற்றும் பலரும் புன்னை மரத்தைக் குயில்களுக்கு உறைவிடமாகச் சொல்லுகிறார்கள். இங்ஙனம் சொல்லுகிற விதனால் *புந்நாகதல்லஜம்

அஜஸ்ர ஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்யநிஜ ஸௌரபமாமநாம:☼ என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் அருளிச்செய்தபடி திருவாய்மொழியின் சொற்சுவையும் பொருட்சுவையுமூறின கோயிற் புன்னை மரத்தின் கீழே அமர்ந்து விசேஷார்த்தங்கள் கேட்டு வளருமவர்கள் விவக்ஷிதர்கள். திருவரங்கம் பெரியகோயிலில் பூருவாசாரியர்களின் காலந்தொடங்கித் திருப்புன்னைமரம் ஸுப்ரஸித்தம். நம் முதலிகள் அதன் கீழெயிருந்து திருவாய்மொழியின் அர்த்தங்களைச் சிந்தனைசெய்வார்களென்பது ஸ்ரீவசநபூஷண வ்யாக்யாநாதிகளில் ப்ரஸித்தம். திருவாய்மொழியில் (3-5-4) ☼தம்பிறப்பால் பயனென்னே சாதுசனங்களிடையே☼ என்றவிடத்து ஈட்டிலும் "திருப்புன்னைக் கீழே ஒருவரிருக்குமிடத்திலே நம் முதலிகள் பத்துப்பேர்கூட நெருக்கிக்கொண்டிருக்கச் செய்தே" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. மேலே யெடுத்துக் காட்டிய பட்டருடைய ஸ்தவ ஸ்ரீஸூக்தியில் ☼அஜஸ்ர ஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்யநிஜ ஸௌரபம்—புந்நாகதல்லஜம்☼ என்று அந்தத் திருப்புன்னையின் பெருமை நன்கு விசதமாக்கப்பட்டது; ஆகவே அந்தத் திருப்புன்னையின் நிழலிலேயிருந்து ☼குயில் நின்றால் பொழில்சூழ் குருகூர்நம்பி பாவினின்னிசை பாடிக் களிக்குமவர்கள் குயிலாக விவக்ஷிதர்கள். (2)☼மாம்பொழில் தளிர்கோதிய மடக்குயில் வாயது துவர்ப்பு எய்தத் தீம் பலங்கனி தேனது நுகர்☼ (பெரியதிருமொழி) என்று குயில்களின் ஓர் இயற்கை கூறப்பட்டது. (அதாவது) முதலில் மாந்தளிர்களிலே வாய்வைத்ததனால் வாய் துவர்த்துப்போக, அந்தத் துவர்ப்பு நீங்குதற்காகப் பலாப்பழத் தேனைப் பருகுமியல்வு சொல்லிற்று. இதனால், முதலில் ஸாமாந்ய சாஸ்திரங்களிலே வாய்வைத்துப் பிறகு விசேஷ (அத்யாத்ம) சாஸ்திரங்களிலே மிகப் பேரின்பமாகப் போதுபோக்கும் பக்தர்களின்படி சொல்லிற்றாகிறது. (3)☼வநப்ரிய; பரப்ருத:கோகில: பிக:☼ என்கிற அமரகோசத்தின்படி குயில்களுக்கு வடமொழியில் பரப்ருதமென்று பெயர். காக்கையின் கூட்டிலே கொண்டுவிடப்பெற்று அவற்றால் போஷிக்கப்பட்டு வளருமவை குயில்கள்; அதுபோல, பரனான ஆசார்யனால் போஷிக்கப்பட்டு வளரும் குருகுலவாஸிகளைச் சொல்லிற்றாகிறது. (4)☼வஸந்தகாலே ஸம்ப்ராப்தே காக: காக: பிக: பிக:☼ என்கிறபடியே சில கால விசேஷங்களில் குயில் தன் மிடற்றோசை காட்டி வீறுபெறும். அதுபோல ஆசிரியர்களும் ஸமய விசேஷங்களிலே கம்பீரமாக வாய்விட்டு உபந்யஸித்து மற்றையாரிற் காட்டில் தமது வைலக்ஷண்யத்தை விளக்குவார்கள். (5) ☼பிக: கூஜதி பஞ்சமம்☼ என்று, குயில் கூவும் இசையானது பஞ்சமமெனப்படும். அப்படியே ஆசிரியர்கள் வாய்விட்டு அருளிச்செய்யுமது நான்கு வேதங்களுக்கு அடுத்தபடியாக ஐந்தாவது வேதமோ! என்னலாம்படி யிருக்கும். "அல்லி மலர்ப் பாவைக்கு அன்பரடிக்கன்பர் சொல்லுமவிடு சுருதியாம்" என்ற ஞானஸாரப் பாசுரமும் காண்க. [அவிடு—ஸாமான்யமானவார்த்தை]

3 **மாது**—இச்சொல்லுக்கு அழகென்றும் பெண் என்றும் சில பொருள்களுண்டேயன்றி, பிராட்டியென்கிற பொருள்கிடையாது. முன்னும்பின்னுமுள்ள சொற்சேர்த்தியைக் கொண்டு பிராட்டியென்று பொருள் கொள்ளலாகிறது. ஸாமாந்யஶப்தத்திற்கு விஶேஷத்தில் பர்யவஸான மென்றுணர்க. இது தமிழ்நூற்களில் பெரும்பான்மையாகவுள்ளது * கோவைவாயாள் பொருட்டு* என்கிறார்

நம்மாழ்வார். அவள்யார்! என்றால் "ஏற்றினெருத்த மிறுத்தாய்" என்ற அடுத்த வாக்யத்தைக்கொண்டுநப்பின்னையென்றறிகிறோம்."வம்பவிழ்கோதைபொருட்டா" என்றவிடமும் இத்தகைத்தே. "தையலாள்மேல் காதல் செய்த" என்கிறார் திருமங்கையாழ்வார் அவள்யாவளென்னில், "வாளரக்கன்...." என்று மேலுள்ளதைக் கொண்டு ஸீதாபிராட்டியென்றறிகிறோம். ஐவர் என்று அடிக்கடி வருகிறது; சிலவிடங்களில் பஞ்சபாண்டவர்களையும்,சிலவிடங்களில் பஞ்சேந்திரியங்களையும் பொருளாகக் கொள்ளுகிறோம். இதுவும் முன்பின் சொற் செறிவைக் கொண்டே. இந்த மரியாதை தமிழ்நூல்களில்மட்டுமேகாண்கிறோம்; வடநூல்களிற் காண்கின்றிலோம்.

**4. பொருந்திய—**

"பொருந்தியதேசுப் பொறையும் திறலும் புகழும் நல்ல
திருந்தியஞானமும் செல்வமும் சேரும், செறுகலியால்
வருந்தியஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன் எங்களிராமானுசனை யடைபவர்க்கே.

(இராமானுசநூற்றந்தாதி—32.)

கலிகலுஷநிவர்த்தகரான நம்மிராமானுசரைப் பணிபவர்களுக்கு ஸ்வரூபாநுரூபமான மதிப்பும், *களிப்புங் கவர்வு மற்றிருக்கையாகிற க்ஷமாகுணமும் ஜிதேந்த்ரியத்வமாகிற மிடுக்கும் குணசாலிகளென்கிற கீர்த்தியும் தத்வஹித புருஷார்த்தங்களில் தெளிந்த ஞானமும் பக்திச்செல்வமும் சேரும் என்றவாறு.

**5. மார்பன்**—ஸ்ரீரங்கநாதனுடைய திருமார்பை ஸ்ரீரங்கராஜன் தவ பூர்வஶதகத்தில் பட்டர் அற்புதமாக வருணிக்கிறார்—"வக்ஷஸ்ஸ்தல்யாம் துலஸிகமலா கௌஸ்துபைர் வைஜயந்தீ ஸர்வேஶத்வம் கதயிதராம் ரங்கதாம் நஸ்ததாஸ்தாம், கூர்மவ்யாக்ரீநகபரிமிலத்பஞ்சஹேதீய ஶோபாதாநத்தா பௌக்த்யாபரண மதிகம் நஸ் ஸமாதிம் திநோதி" என்கிற சுலோகம் பரம போக்யமானது. திருத்துழாயலங்கல் திருமாமகள் குருமாமணிப்பூண் வனமாலை ஆகிய இத்திருவாபரணங்கள் நம்பெருமாளுடைய ஸர்வேஶ்வரத்வத்தை விளக்குகின்றன; இஃதிருக்கட்டும். ஆமைநகம் புலிநகம் பஞ்சாயுதஹாரம் என்னுமித் திருவாபரணங்கள் (க்ருஷ்ணவதாரத்தில்) யசோதைப்பிராட்டி சாத்தினவை இன்னமும் திருமார்பிலே திகழாநின்று ஸௌலப்யகாஷ்டையை விளங்கச் செய்கின்றன வாதலால் இத்திருவாபரணங்களே நமது சிந்தனைக்கு இனியவைஎன்றாராயிற்று.— அமலனாதிபிரானில் ¤கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்—அணியரங்கன்? என்றபாசுரத்தைக் கண்டவர்கள் 'பெரிய பெருமாளேயோ வெண்ணெயுண்டது" என்று கேட்க, "நம் பெரிய பெருமாளுடைய கொறுட்டை மோந்துபார்த்தால் தெரியும்" என்றருளிச் செய்தவரன்றோ பட்டர்.

**6. புகழ்**— குறளாசிரியர் *தோன்றில் புகழொடுதோன்றுக, அஃதிலார் தோன்றலில் தோன்றாமை நன்று¤ என்றார். கீர்த்தியை அடியோடு பெறாதவர்களும் அபகீர்த்தியை அபரிமிதமாகப் பெற்றவர்களும் மலிந்த இவ்வுலகில் "நர: பதிதகாயோபி யஶ:காயேந ஜீவதி" என்னும்படியாகப் புகழுடம்புடனே ஜீவித்திருக்குமவர்கள் மிகச்சிலரேயன்றோ? அவர்களில் *ஸர்வதேஶதஶாகாலேஷ்வ! அவ்யாஹதபராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம். திகந்தவ்யா

பிநீ பூயாத் ஸாஹிலோக ஹிதை ஷிணீ¤ என்று தொள்ளாயிரம் வருடங்களுக்கு முன்பு தோன்றின மங்களாஶாஸந ச்லோகம் ஈஷத்தும் பழுதுபடாதபடி இற்றைக் கும் நாளைக்கும் எற்றைக்கும் செழித்தோங்கும் புகழ் எம்பெருமானொருவர்க் கேயன்றோ? "திஶாமுகேஷு யதிராஜடஶ:பட ஹ:" என்ற யதிராஜஸப்ததி ஸூக்தி யை ஸ்மரிப்பது.

**7 மலிந்த.** ¤மலிபுகழ்க் கணபுர முடைய வெம்மடிகளை¤
வலிகெழு மகிளயல் வயலணி மங்கையர்¤
கலியன தமிழிவை விழுமிய விசைபினொடு¤
ஒலிசொலுமடியவர் உறுதுயரிலரே.¤

திருமங்கையாழ்வாருடைய திருக்கண்ணபுரப் பதிகங்கள் பத்தினுள் ¤வியமுடை விடையின முடைதர மடமகள்¤என்கிறபாசுரத்தை முடிவிற்கொண்டபதிகம் (8-7-) திருவாய்மொழியில் ¤உயர்வறவுயர்நல முடையவன்யவனென்¤ என்கிற முதற் பதிகத்தின் சாயையிலே அமைந்தது. பெரும்பாலும் குறிலெழுத்துக்களையிட்டே அமைத்தபதிகங்கள் இவையிரண்டே. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வசதகத்தில்-

"த்ருதகநகஜகிரி பரிமிலதுததி—ப்ரசலித லஹரிவதஹ மஹமிகயா,
ஸ்நபயதி ஜநமிமாபஹாரதி தம: பணிஶய மரதகமணி கிரணகண:"

என்கிறச்லோகத்தை இந்தச்சாயையிலேயே [ஹ்ரஸ்வாக்ஷரமயமாகவே] அருளிச் செய்து வைத்தார்.

**8. மா**—"பாட்டுக் கேட்குமிடமும் கூப்பீடுகேட்குமிடமும் குதித்தவிடமும் வளைத்தவிடமும் ஊட்டுமிடமுமெல்லாம் வகுத்த விடமேயென்றிருக்கக்கடவன்" என்பது ஸ்ரீவசநபூஷண சூர்ணை, (4-7,) நித்யமுக்தர்களின் ஸாமகானம் கேட்கு மிடமான திருநாடும், அஸுர ராக்ஷஸாதிபீடிதர்களான அமரர்களின் ஆர்த்த நாதம் கேட்கச் செவிகொடுத்துக் கொண்டு கண்வளருமிடமான திருப்பாற்கடலும். அங்கு நின்றும் வந்து அவதரித்த விபவாவதாரஸ்தலங்களும், நினைத்தது தலைக்கட்டு மளவும் மலையாளர் வளைப்புப் போலே இட்ட அடிபேராமல்வளைத்துக் கொண் டிருக்கிறஅர்ச்சாவதாரஸ்தலங்களும் ஹ்ருதயகமலத்திலேயிருந்து தானுகந்தார்க் குக் தன்னழகை புஜிப்பிக்கிற அந்தர்யாமித்வ ஸ்தலமுமாகிற இந்தப்ராப்யஸ்தலங் களெல்லாம் ஆசார்ய விஷயமேயென்று துணிந்திருக்கவேணுமென்கை.

**9 மன்னு—**

*மன்னுமதுரை தொடக்கமாக வண்டுவராபதி தன்னளவும்
தன்னைத் தமருய்த்துப் பெய்யவேண்டித் தாழ்குழலாள் துணிந்ததுணிவைப்
பொன்னியல்மாடப் பொலிந்துதோன்றும் புதுவையர்கோன் விட்டுசித்தன்கோதை
இன்னிசையால் சொன்ன செஞ்சொல்மாலை ஏத்தவல்லார்க்கிடப் வைகுந்தமே.*

இது நாச்சியார்திருமொழியில் பன்னிரண்டாவதுபதிகத்தின் நிகமனப்பாசுரம். இப்பதிகத்தில் ஆண்டாளுடைய அநுபவம் மிக அற்புதமானது. கண்ணபிரான் 'ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹி ஆகதோ மதுராம் புரீம்' என்றபடி வடமதுரையில் வந்து திருவவதரித்தானென்று

கேட்டு [அவதாரஸமாப்தியாய் விட்டதென்பதைமறந்து] தன்னை உடனே வட மதுரையில் கொண்டுசேர்க்கும்படி உற்றாருறவினரைவேண்ட, அவர்களும் அப்ப டியே மதுரையில்கொண்டு சேர்த்துக் கண்ணபிரான் எங்கே? என்று விசாரிக்க, அவதரித்தவுடனே அப்போதே நள்ளிருளிலேயே திருவாய்ப்பாடிக்குச் சென்று சேர்ந்துவிட்டாரே! என்ன; 'அங்கே கொண்டுபோங்கோள்' என்று ஆண்டாள்கூற, அப்படியேகொண்டுசென்று'கண்ணபிரான் எங்கே?'என்ன' நந்தகோபர் திருமாளி கையிலேவாழ்கிறான்' என்று கூற, ஆண்டாள் சொற்படியேஅவளை அங்கேஅழைத் துக் கொண்டுபோய் 'கண்ணபிரான் எங்கே?' என்று கேட்க, *தீரஸமீரே யமுநா தீரே வஸதி வநே வநமாலீ, கோபீபீநபயோதரமர்தந நிர்தய கரயுகசாலீ*=யமு னைக் கரையிலே விளையாடுகிறானென்று கூற, ஆண்டாளை அவ்வாற்றின் கரையிலே கொண்டுவிட்டு, கண்ணபிரான் எங்கே விளையாடுகிறானென்று கேட்க, 'காளியகாட்' என்னுமிடத்தில் காளியமர்த்தனத்திற்குச் சென்றிருப்பதாகச் சொல்ல, ஆண் டாளை அங்கே யழைத்துச் சென்று விசாரிக்க, மஹர்ஷிபத்தினிகளின் அடிசிலுண் கைக்காக பக்தவிலோசனத்திற்கு எழுந்தருளி யிருப்பதாகக் கூற, அங்கேயழைத் துச் சென்று விசாரிக்க, ப்ரலம்பாஸுரனை யழிக்கப் பலராமர் பாண்டிவடமென்கிற இடத்திற்குச் செல்ல, கண்ணனும் அவனைப் பின்தொடர்ந்து போயினனென்று கூற, அங்கே அழைத்துச் சென்று விசாரிக்க, கோவர்த்தனத்திற்குச் சென்றிருப்ப தாகக் கூற, அங்கே யழைத்துச் சென்று விசாரிக்க கோவர்த்தனமலையைச் சொற் றக் குடையாக ஏந்தி ஏழுநாள் நின்றிருந்து புறப்பட்டுப்போய் வெகுநாளாயிற்றே, இப்போது த்வாரகாபுரியில் எழுந்தருளியிருக்கக்கூடுமென்று கூற; ஆகில் என்னை த்வாரகாபுரிக்குக் கொண்டுபோய்ச் சேருங்கள் என்று ஆண்டாள் சட்டளையிட்ட தாக இப்பதிகம் தலைக்கட்டுகிறது. கோதையின் ஆற்றாமையைக் கண்ட கண்ண பிரான் த்வாரகாபுரியிலே ஸம்ச்லேஷித்துப் பிரிந்தனன்போலும்.

**10 மாறன்**—திருவாய்மொழியில் நம்மாழ்வார் திருவாக்கினால் "நம் மாழ்வார்க்கு மேற்படவும் ஒரு தெய்வமுண்டோ?" என்று கேட்பதாக ஒரு பாசுர முள்ளதே, அந்தப் பாசுரம் சொல்ல முடியுமா? என்று ஒருகால் ஒருபெரியவரை வினவினேன்; இது அஸம்பாவிதமான கேள்வியாயிருக்கிறதே, 'நம்மாழ்வார்தாமே நமமாழ்வார்க்கு மேற்பட்டதெய்வமுளதோ?' என்று கேட்டிருக்கிறாரென்றால் இத னில் மிக்கோரயர்வுண்டே? என்றார் அந்தப் பெரியார். அப்போது (திருவாய்மொழி யில்) 2–2 *திண்ணன் வீட்டுப்பதிகத்தில் (3) ஏறனைப்பூவனை* என்று தொடங்கும் பாசுரத்தில் (ஈற்றடி) *மாறனில் மிக்குமோர் தேவுமுளதே?* என்று இல்லையா? என்றேன். அவர் பரமரஸிகராகையாலே ஆக்ஷேபமொன்றும் சொல்லாமல் புன்முறுவல் காட்டிப்போனார்.

(இங்கே ஒரு மருமம் கேளீர்!)

ஶாரீரகமீமாம்ஸையில் *ஸ்ம்ருத்யநவகாஶ தோஷப்ரஸங்க இதிசேந் ந அந்ய ஸ்ம் ருத்யநவகாஶ தோஷப்ரஸங்காத்*என்றஸூத்ரத்தின்பாஷ்யத்தில் *யத் வை கிஞ்ச மநுரவதத் தத்பேஷஜம்* என்கிற தைத்திரீயஸம்ஹிதாச்ருதி வாக்யத்தை உதா ஹரித்து, மநு என்பதற்கு ஸ்ம்ருதிகர்த்தாவான மநுமஹர்ஷியைப் பொருளாக உரைத்திருக்கின்றார்கள் (ஸூத்ர) பாஷ்யகாரர்கள். ஆனால் (ச்ருதியில்) அந்த

விட்டத்திற்கு மநுமஹர்ஷியென்னும் பொருள் ப்ரஸக்தமன்று. அதுபோல் இதனைக் கொள்க. பெரியாழ்வார் திருமொழியில் (4—2—7) கொன்னவில் கூர்வேல்கோன் நெடுமாறன் தென்கூடல்கோன் தென்னன்கொண்டாடும் திருமாலிருஞ்சோலையே" என்ற பாசுரத்தில் காணும் மாறனுக்கு இந்தப்பொருளை நினைப்பாரில்லை.

**11, 12, 13. அடிபணிந்துஉய்ந்தவன்**—(இந்த மூன்று சொற்களுக்கும் தனித்தவிவரணம் பேசவேணும். "மாறனடி பணிந்துய்ந்தவன்" என்கிற சொற்றொடரைச் சிறிது அநுபவிக்கிறேன்,) இராமானுச நூற்றந்தாதியில் எம்பெருமானாருடைய பெருமை பலபல விதமாகப் பேசப்பட்டிருந்தாலும் அவையெல்லாம் ஒன்றுகூடினாலும் 'மாறனடிபணிந்துய்ந்தவிராமானுசன்' என்றவிந்த ஒருவாக்கியத்திற்கு ஈடாகாது. மணவாளமாமுனிகள் யதிராஜவிம்ஸதி தொடங்கும்போது "ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வய நித்யஸேவா ப்ரேமாவிலாஶய பராங்குஶபாதபக்தம்" என்றருளிச் செய்தது இதனையடியொற்றியே. திருவாய்மொழித் தனியன்களில் "ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமாநுசமுனிதன், வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்த பெருஞ் சீரார்சடகோபன் செந்தமிழ் வேதம் தரிக்கும், பேராத வுள்ளம் பெற" என்னும் தனியனொன்று போதுமே.

(தொடரும்)

## நமது பகவத்விஷயப் பதிப்பு முற்றிற்று.

நஞ்சீயரருளிச்செய்த ஒன்பதினாயிரப்படி, பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி, வடக்குத் திருவீதிப்பிள்ளை பட்டோலை கொண்ட ஈடுமுப்பத்தாறாயிரப்படி ஆகிய இந்த மூன்று வியாக்கியானங்கள் கொண்ட எமது பகவத்விஷய பதிப்பின் ஐந்தாவது ஸம்புடம் வெளிவந்து இப்பதிப்பு பூர்த்தியடைந்துவிட்டது. ஏற்கெனவே முந்தின நான்கு ஸம்புடங்களைப் பெற்றவர்கள் பாக்கித் தொகையைச் செலுத்தி இதனையும் பெற்றுக்கொள்வது. ரூ. 30, 50, 70 — இப்படியாகச் செலுத்தியுள்ளவர்கள் மிச்சமும் செலுத்திப் பெற்றுக்கொள்வது. பூர்த்தியாகச் செலுத்தினவர்களுக்கு நாமே அனுப்பிவிடுவோம். புதிதாகப்பெற விரும்புமவர்கள் (100) ரூபாய் செலுத்தி ஐந்து ஸம்புடங்களையும் பெறக்கடவர்கள். சென்ற வருடம் காகிதப்பஞ்சம் அதிகமாயிருக்கையில் இப்பதிப்பு ஆரம்பிக்கப்பட்டபடியால் 500 பிரதிகளே அச்சிடப்பட்டன. ஆகவே இரண்டொருமாதங்களுக்குப் பிறகு இது துர்லபமாகும்.

மானேஜர், **க்ரந்தமாலா ஆபீஸ்,**
காஞ்சீபுரம்.

## பெரியாரின் பரமபதப்ராப்தி

காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் திருவேங்கடாசாரியர் ஸ்வாமி சென்னையில் அட்வகேட்டாக வாழ்ந்தவர். சென்ற ஏப்ரல்மாத முடிவில் சென்னையில் திருநாடலங்கரித்தார். இவர் K. திருவேங்கடாசாரியர் என்று வழங்கப்பட்டு வந்தபடியால் இவர் பிரதிவாதி பயங்கர வம்ஶத்தைச் சேர்ந்தவர் என்பதைப்

பலர் அறியார். காரணை என்கிற அக்ரஹாரத்தில் தோன்றின காரணத்தினல் K என்கிற இன்ஷில் ஆரம்பப் பள்ளிக்கூடத்திலிருந்து தொடர்ந்து வந்துவிட்டது. அதனல் P. B. என்பது விடுபட்டது. தேவப்பெருமாள் தேவஸ்தானத்தில் மரியாதைகள் பெறும் பிரதிவாதி பயங்கர வம்சத்தவர் இவர். எழுபது வயதுக்கு மேற்பட்டவிவர் இரண்டொருவாரமே திருமேனி பாங்கில்லாமலிருந்தார். ஸ்ரீ வைஷ்ணவர்கள் பெரும்பாலும் இவரைப்பற்றி நன்கறிந்தவர்களாதலால் இங்கு நாம் விசேஷித்தெழுதவேண்டியதில்லை. "ஸ்மிதபூர்வாபி பாஷீ" என்பது இவர்க்கே ஏற்குமென்று ஸ்ரீ உ. வே. V. N. வெங்கடவரதாசரரியர், (அட்வகேட், வேதவிலாஸ் எழும்பூர்) ஸ்வாமி அடியேனுக்கருளிய ஸ்ரீமுகத்தில் ஸாதித்திருந்தார். இது மிகப் பொருத்தமானதே.

இவரைப்பற்றி அடியேனெழுதுவது ஒன்றே. சென்னையில் தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலில் 1930 ஜூன் மாதத்தில் அடியேன் உபந்யாஸம் தொடங்கின நாள் முதலாக சென்னையில் எந்த இடத்தில் உபந்யாஸம் நடந்தாலும் ஆப்ஸண்டு, லேட் இரண்டுமில்லாமல் ஆஜராகியிருந்தவர் இவர் ஒருவரே. இதில் அணுவளவும் அதிசயோக்தியில்லை.

இவர்க்குப் புதல்வர்கள் நால்வர். மேதாவிகள். தந்தையார் குணத்திற்குத் தகுதியானவர்கள். நம்முடைய அநுதாபத்தை இவருடைய குடும்பத்தினர்க்குத் தெரிவித்து நிற்கிறோம். ... ... ... ...



ஸ்ரீமான் உ. வே.
R. கண்ணனையங்கார்,
தமிழ்ப் பண்டிதர், ஸ்ரீரங்கவாஸீ.
(ஸம்ப்ரதாய ப்ரவசன கர்த்தா)

## பகவத் ராமாநுஜ திவ்ய வைபவம் (முன் தொடர்ச்சி)

### — திருக்கச்சிநம்பியிடம் ராமாநுஜருடைய ப்ரதிபத்திவிசேஷம் —

திருக்கச்சி நம்பிகளிடத்திலே மிகவும் பக்திகொண்டு அவர் திருவடிகளிலே ஆச்ரயிக்க வேணுமென்று கருதி அக்கருத்தை அவரிடத்தே விஜ்ஞாபிக்க, இது வர்ணாச்ரமத்துக்கடுத்த வைதிக மர்யாதைக்குப் போந்திராது என்று அவர் மறுத்திட்டார். ஆச்ரயிக்கும் பாக்கியந்தான் இல்லையானாலும் *போனகஞ்செய்த சேடமாவது பெற்றுப் புனிதராவோமென்றெண்ணி ஒருநாள் நம்பியிடம் சென்று இன்று அடியேனது குடிசையிலே அமுது செய்ய எழுந்தருளவேணும்' என்று வேண்ட அவரும் இசைந்தருள, ஸ்வாமி மிக்க மகிழ்ச்சிகொண்டு தம் திருமாளிகைக் கெழுந்தருளி இச் செய்தியைத் தேவியாரிடம் தெரிவித்து அறுசுவை யடிசிலும் அதிமதுர பக்ஷ்யவர்க்கங்களும் செய்யும்படி நியமித்து, தமது நித்ய கைங்கர்யமான திருமஞ்சனத் திருப்பணியையும் விரைவாகத் தலைக்கட்டித் திருமாளிகையிற் போந்து திருவாராதனமும் கண்டருளப்பண்ணி, அவ்வளவிலும் திருக்கச்சி நம்பி யெழுந்தருளக் காணாமையாலே அவரை யழைத்து வருவதற்குத் தெற்குத் திருவீதியாலே மேற்கே யெழுந்தருளினார். அத்தருணத்திலேயே நம்பிகள் வடக்குத் திருவீதியாலே ஸ்வாமி திருமாளிகைக் கெழுந்தருளி, திருவாலவட்டத் திருப்பணிக்காக விரைந்து செல்லவேண்டியிருப்பதை யறிவித்து நின்றளவிலே ஸ்வாமி தேவிகள் இவரை ஒரு மூலையிலே உட்காரவைத்து அமுதுசெய்யப் பண்ணுவித்து அனுப்பிவிட்டு அமுதுசெய்த விடத்தைக் கோமயத்தாலே சுத்திபண்ணித் தெளித்துத் தாமும் தீர்த்தமாடி நிற்கிறவளவிலே நம்பியையழைத்துவரச் சென்றிருந்த இளையாழ்வார் அவர் இங்கே போந்தமை யறிந்து மீண்டுவந்து நம்பியைக் காணாமல், மனைவி நீராடியிருந்தபடியைக்கண்டு இதுவென்? என்றுகேட்க; 'அந்த ஸ்ரீவைஷ்ணவர் வந்து கைங்கரியத்திற்கு விரைந்து செல்லவேண்டியிருப்பதைத் தெரிவித்தார்; உடனே அவரை அமுதுசெய்யப் பண்ணுவித்தனுப்பினேன்; அவர் நிஹீந வர்ணஸ்தரானமையாலே இலையைக் கோலாலே தள்ளிக் கோமயத்தாலே மெழுகினேன். அதனால் சரீரம் அலம்ப வேண்டிற்று' என்றாள். அதுகேட்டு ஸ்வாமி மிகவும் நொந்து வருந்தி எம்பெருமான் திருவுள்ளமிருந்தபடிக்கு நாமென் செய்வதென்று மனம் தளர்ந்திருந்தார்.

### • திருக்கச்சிநம்பி யாறுவார்த்தை

மறுநாள் திருக்கச்சிநம்பிபக்கலிற் சென்று 'அடியேன் சில நினைவுகள் நினைத்திருந்தேன்; அவை விஷயமான நிர்ணயத்தைத் தேவரீர் பேரருளாளன்பாடே தெரிந்துகொண்டு அடியேனுக்கு நியமித்தருளவேணும்' என்று ஸ்வாமி ப்ரார்த்திக்க, நம்பியும் அப்படியே யாகுக வென்றிசைந்து அன்றிரவு பெருமாளிடத்திலே விண்ணப்பஞ்செய்து மறுமாற்றம் பெற்று மறுநாள் இளையாழ்வார்க்கு அறிவித்த ஆறுவார்த்தைகள்: —1. பரதத்வம் நாமே, 2. சிதசித்தீச்வரபேதமே தர்சனம். 3. ப்ரபத்தியே தஞ்சம். 4. அந்திமஸ்ம்ருதி நிர்ப்பந்தமில்லை. 5. சரீராவஸானத்திலேமோக்ஷம். 6. பெரியநம்பி திருவடிகளிலே ஆச்ரயிப்பது— என்பன. இங்ஙனே

ஆறுவார்த்தைகளை அருளிச்செய்யக்கேட்ட இளையாழ்வார் இவ்விஷயமான நிர்ணயமே தாம் அறியவிருந்தமையால் இவற்றைத் தெளியவறியப்பெற்றதற்கு உவந்து, பெரியநம்பி திருவடிகளிலே ஆச்ரயித்து உஜ்ஜீவிப்பதற்காக அறுதியிட்டுத் திருவரங்கம் பெரிய கோயிலுக்குப் புறப்பட்டருளினர்.

## ராமாநுஜர் மதுராந்தகத்தில் பெரியநம்பிகளை யாச்ரயித்தல்

அக்காலத்திலே கோயிலில் தர்சந நிர்வாஹத்திற்காக இளையாழ்வானர அங்கே வரவழைத்து நிலைநிறுத்த வேணுமென்று ஆவல்கொண்ட முதலிகள் பெரிய நம்பியை நோக்கி இது உம்மாலாகக்கூடிய காரியமாதலால் நீரே காஞ்சீபுரிக்குச் சென்று காரியம் பார்க்கக் கடவீரென்று நியமிக்க அவரும் அப்போதே ஸகுடும்பமாகப் புறப்பட்டு நம்பெருமாளிடம் விடைபெற்றுக்கொண்டு தேவப்பெருமாள் ஸன்னிதியை நோக்கி எழுந்தருளா நிற்கையில் இடையில் மதுராந்தக க்ஷேத்திரத்திலே ஏரிகாத்தராமன் ஸன்னிதியிற் சேர்ந்து நின்றார். இளையாழ்வாரும் (திருக்கச்சிநம்பிகளின் திருவாக்குப்படியே பெரியநம்பி திருவடிகளிலே ஆச்ரயிப்பதாகப் புறப்பட்டுத்) திருவரங்கம் பெரியகோயிலை நோக்கிச் செல்லாநின்று மதுராந்தகத்திலே சேர்ந்தவாறே அங்குப் பெரியநம்பியை யாத்ருச்சிகமாக ஸேவிக்க நேர்ந்து ஆச்சரியப்பட்டு 'எண்ணின பலன் எ தி ரே வ ந் து வாய்த்ததுபோல இப்படி நமது பாக்கியம் பரிபக்குவமாவதே!' என்று உகந்து இனி காலவிளம்பம் பொறுக்கலாகாதென்று அப்போதே திருவிலச்சினை ஸாதித்துத் தம்மை உய்விக்குமாறு வேண்ட, அவரும் இவருடைய ஆர்த்தியின் கனத்தைக்கண்டு அப்போதே அவ்விடத்திலேயே பஞ்சஸம்ஸ்காரங்களை ப்ரஸாதித்தருளி ஆளவந்தார் திருவடிகளே தஞ்சமென்று கொண்டிருக்கும்படி நியமித்தருளினர், பிறகு அங்கு நின்றும் புறப்பட்டுப் பெருமாள் கோயிலிலே வந்து சேர்ந்தார்கள். இளையாழ்வார் தம்முடைய திருமாளிகையிலேயே மேல்பாதியிலே பெரியநம்பி ஸகுடும்பமாக வஸிக்க இடமளித்துத் தளிகைக்கு வேண்டும் பதார்த்தங்களும் ஸமர்ப்பித்து ஆராதித்துக் கொண்டு அவர் ஸந்நிதியிலே அருளிச்செயல்களைக் கற்பதும் தர்சந ரஹஸ்யார்த்த விசேஷங்களைக் கேட்பதுமாயிருந்து வந்தார்.

## — பெரியநம்பி கோயிலுக்கெழுந்தருளல் —

இங்ஙனேயிருந்து வருகையில் பெரியநம்பி தேவிகளுக்கும் இளையாழ்வாருடைய தேவிகளுக்கும் மனப்பொருத்தமின்றிக்கே வைரஸ்யமுண்டாகத் தொடங்கிற்று. இருவர்க்கும் கிணற்றின் கரையிலே தாம்பு விஷயமான விவாதமுண்டாகி வார்த்தைகளும் விஞ்சின; இதைப் பெரியநம்பி யுணர்ந்து தமது தேவிகளைக் கோபித்து, இனி நாம் இங்கு வாழ்வது தகுதியற்றதென்றெண்ணி உடனே கோயிலுக்குப் புறப்படத் திருவுள்ளமாய் இளையாழ்வார் பக்கலிலும் அறிவியாமல் அவர் அநுஷ்டானத்திற்குச் சென்றிருந்த ஸமயம் பார்த்து ஸகுடும்பமாக மீண்டு கோயிலுக்கெழுந்தருளினர். ஸ்வாமி அனுஷ்டாநம் பண்ணி யெழுந்தருளிப் பெரிய நம்பியை ஸேவிக்கப்பெறாமல் விசாரித்துச் செய்தியறிந்து திருவுள்ளம் மிகவும் உடைகுலைப்பட்டு நின்றார்.

